[1st November 1958

*Tanneries*

** 763 Q.—Sri V. K. KOTHANDARAMAN : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1951-ம் வருஷம் முதல் 1957-ம் வருஷம் வரை நமது ராஜ்யத்தில் தோல் பதனிடும் தொழிற்சாலைகள் ஜில்லாவாரியாக எந்தெந்த ஊர்களில் எத்தனை இருந்தன ?

(ஆ) அவைகளில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்கள் எவ்வளவு பேர் ?

(இ) மேற்படி தொழிற்சாலைகளில் 1951-ம் வருஷம் முதல் 1957-ம் வருஷம் வரை எத்தனை மூடப்பட்டன ?

(ஈ) மூடியதால் வேலையில்லாமல் பாதிக்கப்பட்டவர்கள் எத்தனை பேர் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*), (*b*), (*c*) & (*d*) A statement[a] showing the number of tanneries which were functioning in this State (district-war) during 1951–57, the number of tanners employed in those tanneries, the number of tanneries closed and the number of tanners affected on account of the closure during the period is placed on the table of the House.

Sri V. K. KOTHANDARAMAN : நமது இந்தியாவில் இருக்கக்கூடிய டானரி தொழிற்சாலைகளில் 90 சத விகித தொழிற்சாலைகள் நமது ராஜ்யத்தில் இருக்கின்றன. அதில் 100-க்கு 100 மக்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். 1956-ம் வருஷத்தில் சுமார் 6,438 தொழிலாளர்களும், 1957-ம் வருஷத்தில் சுமார் 1,217 தொழிலாளர்களும் ஆக ஏழாயிரத்துக்கும் அதிகமான தொழிலாளர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்த தொழிற்சாலைகள் மூடப்படுவதனால் இந்த ஏழாயிரத்து சொச்சம் தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இப்படி பாதிக்கப்பட்டவர்களுக்கு வேலை தேடித்தர சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இது ஒரு பொதுவான கேள்வி ஆனால் இந்தத் தொழிலைப் பொறுத்தமட்டில் அயல் நாட்டிற்கு ஏற்றுமதி செய்தால்தான் இது சரியாக நடைபெறும். ஆனால் வர்த்தகத்தில் தயக்கம் இருக்கிறது. ஸ்டாக் இப்பொழுது நின்றுபோயிருக்கிறது. யுனைடெட் கிங்டம், அமெரிக்கா முதலிய இடங்களில் விலை ஒரு நிதானத்தில் இல்லை. இம்மாதிரி காரணங்களால் இது பாதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இதை எந்த விதத்தில் சீர்படுத்தவேண்டும் என்பதில் அவ்வப்போது கவனம் செலுத்தப்பட்டுவருகிறது.

Sri S. LAZAR : இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கக்கூடிய விவரங்களிலிருந்து இந்த வியாபாரம் நாளுக்கு நாள் குறைவதாகத் தெரிகிறது என்று கனம் மந்திரி அவர்கள் சொன்னார். ஆகையால் இந்தத் தொழில் பாதிக்காமலிருப்பதற்கும், தொழிலாளர்களுக்கு வேலை கிடைப்பதற்கும் இந்த அரசாங்கம் ஏதாவது செய்ய முடியுமா ? அதைப்பற்றி பரிசீலனை செய்வார்களா ? இந்தத் தொழில் நல்ல முறையில் இயங்குவதற்கு ஏதாவது நடவடிக்கை எடுக்க முடியுமா என்று அறிய விரும்புகிறேன் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : எவ்வாறு பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதைப்பற்றியும், அது எந்த அளவில் ஏற்றுமதியைப் பொறுத்து இருக்கிறது என்பதையும் யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. அதற்குக் குறிப்பாக என்ன செய்ய முடியும் என்பதைப்பற்றி யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. இதை எப்படி சீர்படுத்த வேண்டும் என்பதைப்பற்றிய தகவல் இப்பொழுது என்னிடம் இல்லை.

---

[a] Printed as Appendix I on page 362 infra.

1st November 1958]

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that most of these tanneries have been closed down (1) because of loss and (2) because of non-availability of raw hides and skins in India? If so, will the Government make it a policy to give liberal loans to the tanners and also advise the Government of India for the liberal imports of raw hides and skins so that our tanners may get adequate supplies of these vital raw materials?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have given the particulars that are available with me and explained the circumstances under which the trade is affected. Regarding the grant of loans, the question of granting loans to industries like this is being looked into.

SRI M. JAGANNATHAN : What action the Government propose to take to give alternative employment to all the employees who are retrenched on account of the closure of these tanneries?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I cannot specifically state what alternative employment would be given to the employees of this industry. That is the case with every industry wherever people are thrown out of employment. Other avenues are being explored.

SRI V. K. KOTHANDARAMAN : அந்நிய செலாவணி தேடிதரக்கூடிய முக்கியமான ஒரு தொழிலை பாதுகாப்பதற்கு வேண்டி நமது சர்க்கார் மத்திய சர்க்காரை வற்புறுத்தி அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ள வற்புறுத்துவார்களா என்பதை அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : **If the hon. Member could specify in what respects we could seek the support of the Central Government, I shall look into the matter.**

SRI N. MARUDACHALAM : கோவையில் எவ்வளவு தொழிற் சாலைகள் இதில் மூடப்பட்டிருக்கின்றன ? அப்படிப்பட்ட தொழிற்சாலைகளில் எத்தனை தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் ? அப்படி வேலையில்லாத தொழிலாளர்களிடமிருந்து அரசாங்கத்திற்கு எத்தனை மனுக்கள் வேலை கொடுக்கும்படி வந்தன ? அதன் பேரில் அரசாங்கம் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன என்பதை அறிய விரும்புகிறேன்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றிய தகவல் என்னிடம் இப்பொழுது இல்லை. தனிக் கேள்வி போட்டால் அதற்கு பதில் சொல்லுகிறேன்.

MR. SPEAKER : கேள்விகள் 764, 765 கனம் அமைச்சர் இல்லாததால் பிறகு எடுத்துக்கொள்ளப்படும்.

### *Scholarship to Harijan and Backward class students*

* 766 Q.—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் பொது மாராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

ஹரிஜன நல இலாக்காவால் ஹரிஜன மாணவர்களுக்கும் பிற்பட்ட வகுப்பினருக்கும் கடந்த 1950-ம் வருடத்திலும் அதற்கு முன்பும் கொடுக்கப்பட்ட உபகாரச் சம்பளம் எத்தனை தடவை எவ்வெப்போது கொடுக்கப்பட்டது ?